உ

சிவமயம்

# देवीकालोत्तरागमः

# தேவீகாலோத்தராகமம்

(சம்ஸ்கிருத மூலமும் தமிழ் மொழிபெயர்ப்பும்)

தமிழ் மொழிபெயர்ப்பு ஆசிரியர் :

**பிரம்மஸ்ரீ ச.பத்மநாபன்**

தலைவர், சிரேஷ்ட விரிவுரையாளர்,

சம்ஸ்கிருதத்துறை,

கலைப்பீடம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

வெளியீடு:

ஸ்ரீ முன்னேஸ்வர தேவஸ்தானம்,

முன்னேஸ்வரம், சிலாபம்.

2018

தேவீகாலோத்தராகமம் / பதிப்பாசிரியர் : ச.பத்மநாபன் / முதற் பதிப்பு : வைகாசி *2018* / வெளியீடு : ஸ்ரீ முன்னேஸ்வர தேவஸ் தானம், முன்னேஸ்வரம், சிலாபம்/ பக்கம் : iv+22 / தாள் : **70கி.** / அச்சு : குரு பிறிண்டேர்ஸ் *39/2,* ஆடியபாதம் வீதி, திருநெல்வேலி, யாழ்ப்பாணம்

ISBN : 978-955-0877-57-7

# முன்னுரை

"தேவீகாலோத்தராகமம்" எனும் 84 சுலோகங்களாக அடங்கிய இச்சிறு நூலை சம்ஸ்கிருத மொழியிலிருந்து தமிழ்மொழியில் மொழி பெயர்த்து வெளியிடுவதையிட்டு பெருமகிழ்வடைகின்றேன். சைவ சித்தாந்த தத்துவத்தில் சம்ஸ்கிருத மொழி மூலங்களான சிவாகமங்களின் ஞானபாதச் சிந்தனைகள் மிகப் பரந்து விளங்குகின்றன. சிவாகமங்களே சித்தாந்தம் என்னும் அம்மரபே சைவ சித்தாந்தம் என உயர்வுடன் சைவசித்தாந்தத் தத்துவத்தின் மூலக்கூறுகள் அனைத்தையும் தெளிவு பட விளக்கும் நூல்களாக விளங்குகின்றன.

தமிழ் மொழி மரபில் சைவசித்தாந்த தத்துவத்திற்கு பதினான்கு மெய்கண்ட சாஸ்திரங்களை விட பல்வேறு சார்புநூல்களும் விளங்குகின்றன. சைவசித்தாந்த தத்துவம் எனும் மிகப் பரந்த அறிவியல் ஆராய்ச்சி மரபிற்கு பல்வேறு பரிணாமங்களிலும் மூலங்களுக்கான வேர்கள் பரந்தோடிக் காணப்படுகின்றன. அம்மரபில் சம்ஸ்கிருத மொழி மரபில் விளங்கும் சிவாகமங்கள் சார்ந்ததும் சைவ சித்தாந்தம் சார்ந்த சிவாகமச் சார்பு நூல்களுமாக அவை மிகப் பரந்த தன்மையனவாக விளங்குகின்றன. சிவாகமம், மற்றும் சிவாகமம் சார்பு நூல்களின் மிகநுட்பமான அறிவின்றி இச்சைவசித்தாந்த தத்துவத்தை அறிந்து கொள்ள முடியாது என்பது உண்மையாகின்றது.

சிவாகமச் சார்பு நூல்களின் வரிசையில் அஷ்டப்பரகரணங்கள் எனும் நூல்கள் காஷ்மீரதேச தர்க்கவியல் நுணுக்கங்களுடன் சிவாகம மூலங்களைக் கொண்டு பரந்த விரிந்த உரைகளையும் கொண்டனவாக விளங்குகின்றன. இதே போன்று பல்வேறுபட்ட தனித்துவமுடைய சிவாகமச் சார்பு நூல்கள் சைவசித்தாந்த சாரமாகவே அமைந்து விளங்கு வது இங்கு கவனத்திற் கொள்ளத்தக்கது.

சம்ஸ்கிருத மொழியில் சைவத்தாந்த அறிவாராய்ச்சியை விளங்கிக் கொள்வதனூடாகவே தமிழ்மொழி மரபில் சைவ சித்தாந்தத்துவ மரபை நன்கு அறிந்து கொள்ள முடியும். சம்ஸ்கிருத

மொழியில் விளங்கும் சைவசித்தாந்த மூலங்களை அறியாது தமிழ் மரபிலேயே அவை நோக்கப்படுமாயின் அதன் பூரணத்துவத்தைப் பெற்றுக் கொள்ளமுடியாத தன்மையதாகின்றது. சம்ஸ்கிருத மொழி மரபினை அறிவதன் மூலம் அதனூடான சைவசித்தாந்த அறிவாராய்ச் சித்திறனை நன்கு அறிந்து தமிழில் சைவ சித்தாந்தத்தை விளக்கிக் கொள்வதால் சைவசித்தாந்தத்தின் மரபு நன்கு வளமும் விருத்தியும் பெறும். சம்ஸ்கிருத மொழி மரபில் விளங்கும் சைவசித்தாந்தத் தத்துவத்தை அறியாது போனால் சைவசித்தாந்த மரபிற்கே பேரிழப்பாய் அமையும் என்பது உண்மையாகும்.

சம்ஸ்கிருத மொழியில் சிவாகம மரபுகளைத் தழுவி எழுகின்ற சார்பு நூல்களாகிய சைவசித்தாந்த நூல் மரபில் காலோத்தர ஆகமங்கள் என சிவாகமங்களில் மரபில் மூலாகமமரபையோ உபாகமமரபையோ பெறாமல் ஆகமம் எனும் உயர்த் தன்மை பெறுகின்றன வாயமைகின்றன. அதன் வரிசையில் ஒன்பது வகையான காலோத்தர ஆகமங்கள் விளங்கு கின்றன. அவையாவன;

1. காலோத்தரம்
2. ப்ருஹத் காலோத்தரம்
3. ஆயுதத்ரய ஸம்ஹிதாகாலோத்தரம் (அல்லது த்ரயுதக்ரந்த சம்ஹிதா காலோத்தரம்)
4. தேவீகாலோத்தரம் (சதுர்விம்சதிஸஹஸ்ர காலோத்தரம்
5. த்வாதச ஸஹஸ்ர ஸம்ஹிதா காலோத்தரம்
6. ஷட்ஸஹஸ்ர ஸம்ஹிதாகாலோத்தரம்
7. த்ரயோதசசதிக காலோத்தரம்
8. ஸதசதிககாலோத்தரம்
9. சது சதிக காலோத்தரம்
10. சார்த்தத்சதி காலோத்தரம்
11. த்ரிசதிகாலோத்தரம்
12. த்விசதி காலோத்தரம்
13. ஸ்கந்த காலோத்தரம்

என்பவையாகும்

இத்தகைய தன்மையுடைய காலோத்தரம் எனும் பெயர் தாங்கும் ஆகமமே தேவீகாலோத்தர ஆகமம் எனும் இந்நூலாகும்.

காலோத்தரம் எனும் பெயருடைய தேவீகாலோத்தர ஆகமம், சிவாகம மரபில் மூலாகமங்கள் இருபத்தெட்டுள் ஒன்றாகவோ உபாகமங்கள் இருநூற்றேழினுள் ஒன்றாகவோ இடம்பெறாத ஆகமம் ஆகும். இங்கு ஆகமம் என்பது தேவீபார்வதிக்கும் ஈஸ்வரன் சிவனுக்கும் இடையேயான உரையாடலாக அமைவதால் அது தேவீ எனும் பெயரை மாத்திரம் தாங்கியதாக உள்ளது. காலோத்தரம் என்பதில் காலம் என்பதில் காலம் கடந்த உயர்வும் சிறப்பும் மேன்மையும் உடைய உயர்ந்த இறை தத்துவம் என்றும், உத்தரம் என்பது மேன்மை, சித் தாந்தம் என்றும் பொருள் தருகிறது. இதனூடாக தேவீ காலோத்தர ஆகமம் என்பது தேவீ பார்வதிக்கு சிவன் கூறிய முக்திக்கு வழி வகுக்கத் தக்க உயர்ந்த சித்தாந்த பிரமாணம் என்று பொருளுடையதாகின்றது.

இவ்வாகமம் ஞானபாதம் மாத்திரதே உள்ளடங்கலாக அமை கின்றது. எண்பத்தி நான்கு சுலோகங்களை மாத்திரம் உள்ளடங்கலாகக் கொண்ட இந்நூல் தமிழ்மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப் படுகின்றது.

சைவசித்தாந்த பாரம்பரியத்தில் சர்வஞானோத்தரம் தேவீகாலோத் தரம் ஆகியன சிறப்புடைய சிவாகமம் சார்பு நூல்களாகக் கொள்ளப்படு கின்றன. தேவீகாலோத்தர விருத்தி என சம்ஸ்கிருத விருத்தியுரையுடன் த. கைலாசபிள்ளையால் யாழ்ப்பாணம் வித்தியானுபாலனயந்திரசாலை பதிப்பிக்கப்பட்டது. இதனது காலம் சுமார் 1940களுக்கு முற்பட்டதாகும்.

தேவீ காலோத்தர ஆகமம் ஆனது சதுர்விம்சதி ஸஹஸ்ரத்தில் ஞான கண்டத்தில் நைஷ்டிகர்களுக்குரிய ஞானசார விசாரம் எனும் பெயருடைய அறுபத்தைந்தாவது படலம் எனச் சுட்டப்படுவது, இதற்குரிய கன்னட மரபைத் தழுவிய சம்ஸ்கிருத உரை, பதிப்புகள், மொழி பெயர்ப்புகள் தொடர்பான பல்வேறு விடயங்கள் ஆய்வு செய்யப்பட்ட வேண்டிய தன்மையன.

இந்நூலை தேவநாகரி லிபிவடிவில் மூலத்துடனுந் தமிழ் மொழி பெயர்ப்புடனும் வெளியிட்டு வைப்பதில் மகிழ்வடைகின்றேன். இந்நூல் உருவாக்கத்தில் மூலத்தினை தேவநாகரிலிபியில் தட்டச்சு செய்து உற்சாக மூட்டியவர் திருவண்ணாமலையைச் சேர்ந்த வரும் தற்போது இங்கிலாந்தில் வசிக்கும் சிவஸ்ரீ கல்யாணசுந்தரக்குருக்கள் ஆவார். அவருக்கு எனது நமஸ்காரங்கள். மேலும் இந்நூல் வளம்பெற பல்வேறு வழிகளிலும் உதவிபுரிந்த அன்புள்ளங்கள் அனைவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றிகள்.

இந்நூலின் பிழைகள் இருப்பின் அவற்றினைத் தெரிவிக்கும் வண்ணம் ஆர்வலர்களை அன்புடன் கேட்டுக் கொள்கின்றேன். விருத்தியுரைக்குரிய கருத்தாளம் கொண்ட மொழி பெயர்ப்பு அவசியமானது என்பதும் இம்மொழி பெயர்ப்பு ஆரம்பத்தன்மையுடைய எளிமையான அறிமுகமாகவும் அமைகின்றது.

தேவீ காலோத்தர ஆகமம் எனும் மூல நூல் கிடைக்காதவிடத்து இந்நூலின் மூலம் தமிழ் மொழி மூலமானதே என எண்ணும் ஆய்வாளர்களுக்கு இந்நூல் மிகவும் பயனுடையதாக விளங்கும் என்பது முக்கியத்துவமுடைய செய்தியாகும்.

தேவீகாலோத்தரம் எனும் மூல நூலுடன் கூடிய தமிழ் மொழிபெயர்ப்பினை ஸ்ரீ வடிவாம்பிகா சமேத ஸ்ரீ முன்னநாதசுவாமி திருவடிகளில் திரிகரண சுத்தியுடன் சமர்ப்பிக்கின்றேன்.

**பிரம்மஸ்ரீ ச. பத்மநாபன்**
பிரதம குருவும் தர்ம கர்த்தாவும்,
ஸ்ரீ முன்னேஸ்வர தேவஸ்தானம்,
முன்னேஸ்வரம், சிலாபம்.

தலைவர், சிரேஷ்ட விரிவுரையாளர்,
சம்ஸ்கிருதத்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
யாழ்ப்பாணம்.
12.05.2018

# देवीकालोत्तरागमः

## தேவீகாலோத்தராகமம்

1 सर्वेषामपि मुक्त्यर्थं मुक्तिमार्गस्य दर्शनम् ।
देवेश ज्ञानमाचारं कृपया कथयस्व मे ॥ १ ॥
ईश्वर उवाच

ஸ்ரீமத் பரமேஸ்வரனது திருமுகத்திலிருந்து தோன்றிய தேவீ காலோத்திரம் என்று கூறப்படும் திவ்ய ஆகமத்தின் ஞானபாதத்தில் பார்வதி உயிர்களுக்கு அனுக்ரஹம் செய்தற் பொருட்டு கிருபை எனும் சொல்லைச் சுட்டுகின்ற கரந்துரைக்கின்ற பரமேஸ்வரனை வணங்கியவராக பரமுத்தி சாதனமாகிய ஞானாசாரவடிவத்தை வெளிப்படுத்துவதற்கு பரமேஸ்வரனை வேண்டுகிறேன். தேவர்க ளின் தலைவர்களே! (பார்வதியாகிய) எனக்கு எல்லோருக்கும் முக்தியின் பொருட்டு முக்திக்கான வழிவகையினை கருணைகூர்ந்து கூறுவீராக.

ஈஸ்வரர் கூறுகிறார்.

2 ज्ञानाचारौ वरारोहे कथयामि तवाधुना ।
प्रविशन्ति यतो मोक्षं ज्ञानिनो ध्वस्तकल्मषम् ॥ २ ॥

தேவியே! உனக்கு இப்பொழுது ஞானாசாரத்தை கூறப்போகி றேன். எவ்வித மெனில் ஞானங்களுக்குரியதும் களங்கமற்றதுமாகிய மோக்ஷத்தை எவ்விதம் சென்றடைகின்றார்கள் என்றவாறாக.

3 येषां बोधेन संजातं कालज्ञानं वरानने ।
न तेषां जायते बोधः शास्त्रकोटिशतैरपि ॥ ३ ॥

அழகிய முகத்தை உடையவளே! இந்த மானிடர்களுக்கு இவ்வு லகில் காலஞான அறிவானது கோடிக்கணக்கான சாஸ் திரங்களை கற்றும் உண்மையான அறிவானது கிடைக்கப் பெறுவதில்லை

4 अतो हि निर्भयो विद्वान्निःशङ्को विगतस्पृहः ।
ज्ञानोत्साहपरो भूयात्श्रद्दधानो निराकुलः ॥ ४ ॥

இதன் காரணமாக விவேகியானவன் பற்று பிரயாசைங்களை (போகங்கள்; ஆசைகள், விருப்பங்கள்) நீங்கியவனாக ஞானத்தை அடைய வேண்டும் என்று எண்ணமுடையவனாகின்றான்.

5 निर्ममः करुणोपेतः सर्वभूताभयप्रदः ।
भजेत्कालोत्तरं देवि मुमुक्षुर्योगतत्परः ॥ ५ ॥

தேவியே! மமகாரம் அற்றவராக; அருளும் நோக்கமுடையவராக; எல்லா உயிர்களுக்கும் அபயமளிப்பவராக; முக்தியை அடையத்தக்க தகுதிப்பாடு உடையவருக்கு காலோத்தரமானது வணங்கத்தக்கதாகிறது.

6 स ब्रह्मा स शिवो विष्णुः स इन्द्रः स षडाननः ।
स गुरुः सर्वदेवाश्च स योगी स तपोधनः ॥ ६ ॥

அவன் ப்ரம்மாவாகவோ விஷ்ணுவாகவோ, இந்திரனாகவோ, ஷடானனனாகவோ, குருவாகவோ, எல்லா தேவர்களுமாகவோ யோகியாகவோ தபஸ்விகளாகவோ

7 पण्डितः स महाभागः कृतार्थः परमार्थतः ।
चलद्वायुसमं चित्तं ध्रियते येन निश्चलम् ॥ ७ ॥

பண்டிதனாக அப்பெரியவன் பெறத்தக்க மோக்ஷத்தை அடைந்த வனாக வாயு அசைவது போன்ற மனத்தை அசையாது பற்றிக்கொள்ள வேண்டும்.

8 स उपायोमि मोक्षस्य सदुपात्तगुणस्तु सः ।
सा प्रज्ञा तदिह स्थैर्यं तत्पुण्यं व्यवसायिनाम् ॥ ८ ॥

இவ்விதம் மோக்ஷத்திற்குரிய சிறந்த வழியானது எல்லோராலும் பெற்றுக் கொள்ளத்தக்கது. அவன் முக்காலமும் அறிந்தவனாக அவ்விதமே இதில் உறுதியுடன் விளங்கியது புண்ணியத்தை அளிக்கின்றது.

9 तदेव तीर्थं दानं च स तपश्च न संशयः ।
येनोपायेन बध्येत वायुभिश्चलनं मनः ॥ ९ ॥

அவ்விதமே தீர்த்தம், தானம், தவம், முதலான நற்செயலிகள் எதன் காரணமாக கட்டுப்பட்டதோ அவ்விதமே காற்றுகளினால் மனதில் அசைவை ஏற்படுத்துகிறது.

10 चित्ते चलति संसारो निश्चलो मोक्ष एव तु ।
तस्माच्चित्तं स्थिरं कुर्यात्प्रज्ञया परया बुधः ॥ १० ॥

மனம் அசைவதால் சம்சாரவாழ்வும்,அசையாமையினால் மோக்ஷமும் ஏற்படுகின்றது. அம்மனதை அறிவுடையவரும் அறிவினாலும் மேலான எண்ணத்தினாலும் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

11 एकान्तिकं सुखं यत्र तथा इवात्यन्तिकं भवेत् ।
निष्कर्मणि परे तत्त्वे को न रज्येत पण्डितः ॥ ११ ॥

ஏகாந்தத்தன்மை எங்கு சுகமுடையதாக எண்ணப்படுகிறதோ அவ்விதமே அவனது இறுதிக்காலம் ஆகிறது. நிஷ்கர்மமாகிய மேலான தத்துவத்தில் பண்டிதனானவன் மனதை கவரும் தன்மை பெறுவதில்லை.

12 निवृत्तो विषयज्ञानात्निष्कलज्ञानतत्परः ।
अनिच्छन्नपि मेधावी लभते मोक्षमक्षयम् ॥ १२ ॥

விஷயங்களில் ஞானத்தின் தன்மையினால் பாராமுகம் உள்ளவனாக நிஷ்கள வடிவத்தில் பக்தியுடையவனாகவும் விவேகமுடையவனாகவும் சுக துக்கங்களில் பற்றற்றவனாக மோக்ஷத்தில் விருப்பமுடையவனாக மேதாவி குறைவற்ற மோக்ஷத்தை பெறுகிறான்.

13 अस्मिताकलया युक्तं चैतन्यं सकलं स्मृतम् ।
अस्मितारहितं चेतश्चैतन्यं शक्तिरुच्यते ॥ १३ ॥

இந்த மாயையிலிருந்து தோன்றிய உலகில் உலகே அனைத்தும் என எண்ணிய தன்மையில் அத்தகைய எண்ணத்தை விடுத்து உலகமே சக்தி என்று கூறப்படுகிறது.

14 तथा प्काशितं विश्वं शक्तिध्यानमुदाहृतम् ।
सर्वालम्बविनिर्मुक्तं निष्कलं ज्ञानमुच्यते ॥ १४ ॥

இதனால் உலகமானது வெளிப்படுத்தப்பட்டதாக சக்தியின் த்யான வடிவமாக உதாரணம் அளிக்கப்பட்டது. அனைத்தும் நீக்கமற விடுவிக்கப்பட்டதாக நிஷ்களமே ஞானம் என்று கூறப்படுகின்றது.

15 अहमंशेन यच्छून्यं चिन्मात्रालोकमद्वयम् ।
मुक्तिबीजं तदाख्यातं परयोगप्रवर्तकम् ॥ १५ ॥

நான் எனும் வகையில் சூனிய நிலையை அடைந்து, அறிவு நிலையில் உலகமானது இருமையற்றதாகவும் அதுவே முக்தி பீஜம் எனக் கூறப்படும். இதுவே மேலான யோகமாக விளங் கப்படுகிறது.

16 चक्राणि नाडयः पद्म- देवताबीजमण्डलम् ।
रूपमित्यादिकं किञ्चिद्ध्येयं नैव कदाचन ॥ १६ ॥

சக்கரங்கள் நாடிகளாக பத்மம், தேவதா பீஜ மண்டலமாக விளங்கும் ரூபம் முதலானவை சிறிது தியானிக்கத்தக்க வைகளாய் அமைகின்றன. வேறில்லை.

17 कुहकं मन्त्रजालं च प्राणायामादि धारणम् ।
सर्वमेतन्न कर्तव्यं मोक्षमक्षयमिच्छता ॥ १७ ॥

மரணம் முதலான மந்த்ர ஜாலத்தையும் பிராணாயாமம், தாரணம் முதலானவையுமான அனைத்தும் குறைவற்ற மோக்ஷத்தை விரும்புகிறவனால் செய்யத்தக்கதல்ல.

18 नात्र पूजा नमस्कारो न जपो ध्यानमेव च ।
केवलं ज्ञानमित्युक्तं वेदितव्यं न किञ्चन ॥ १८ ॥

இங்கு பூஜை, நமஸ்காரம், ஜபம், த்யானம் எவையுமில்லை. தனியாக அறிவென்றே கூறப்பட்டது. இதையே அறிந்துகொள்ள வேண்டும்.வேறில்லை.

19 बहिराहितचित्तानां जायन्ते बन्धहेतवः ।
बहिश्चित्तं निवार्यैव विन्दन् लोके न सीदति ॥ १९ ॥

வெளியில் சென்ற எண்ணங்களினால் பஞ்சம் முதலான காரணங்கள் ஏற்படுகின்றன. வெளியில் செல்லும் எண்ணங்களை தடுப்ப தனூடாகவே உலகை வெற்றி கொள்கின்றான்.வேறு அல்ல.

20 नात्र किञ्चिद्बहिर्नान्तं न मध्यं नाप्यधः क्वचित् ।
सर्वाकारं निराकारं स्वसंवेद्यं विराजते ॥ २० ॥

அந்தப் பொருளுக்கு வெளியிலோ நடுவிலோ கீழோ வேறொன்றுமில்லை. அப்பொருளோ அனைத்தாகவும் இடையற்றதாகவும் தன்வயமாக அறியத்தக்கதாகவும் ஒளிமயமாகவும் விளங்குகிறது

21 यद्यदालोक्य यो जन्तुः कुरुते कर्मसञ्चयम् ।
तद्गतिर्जायते यस्मान्निरालोकं तु चिन्तयेत् ॥ २१ ॥

எவ்வுயிரையும் எவன் இவ்விதமாகக் கொள்கிறானோ அவ்விதமே. தனது செயல்களை இடையறாது மேற்கொள்கின்றானோ அவ்விதமே. எவ்விதமோ அவ்விதம் அந்நிலையை அடைகிறான். நிராலோகத்தினையும் சிந்திக்கவேண்டியவன் ஆகிறான்.

22 हेतुर्नास्ति फलं नास्ति नास्ति कर्म स्वभावतः ।
असद्भूतमिदं सर्वं नास्ति लोको न लौकिकः ॥ २२ ॥

காரணம் இல்லை, பலனில்லை, செயலில்லை என்றவாறாக தனது பாவனையூடாக இவையனைத்தும் அசத்து வடிவமானதே லோகம் இல்லை லௌகிகம் இல்லை.

23 निरालम्बमिदं सर्वं निरालम्बप्रकाशितम् ।
निरालम्बमिदं कृत्वा निरालम्बो भविष्यति ॥ २३ ॥

இவையனைத்தும் நிராலம்பம் அவ்விதமே இவையனைத்தும் நிராலம்பத்தினை பிரகாசிக்க செய்வதாகவும் இதுவே நிராலம்பத்தை செய்வதாகவும் அவ்விதமே நிராலம்பமாகவே ஆவான்

24 व्योमाकारं महाशून्यं व्यापकं यो न भावयेत् ।
संसारी स भवेल्लोके बीजकोशक्रिमिर्यथा ॥ २४ ॥

ஆகாய வடிவமாகவும் மஹாசூன்யமாகவும், ஆகாய வடிவமாகவே எவன் பாவனை செய்யவில்லையோ அவன் பீஜ தோஷத்துடன் கூடிய செயலை உடையவனாக உலகில் சம்சாரீ ஆகின்றான்.

25 ज्ञानोत्पत्तिनिमित्तं तु क्रियाश्चर्याः प्रकीर्तिताः ।
योगं सालम्बनं त्यक्त्वा निष्प्रपञ्चं विचिन्तयेत् ॥ २५ ॥

ஞானம் தோன்றுவதற்கு நிமித்த காரணமாக கிரியையும் சரியையும், கூறப்படுகின்றது. சாளம்ப யோகத்தை விடுத்து நிஷ் பிரபஞ்சத்தை சிந்திக்க வேண்டும்.

26 पातालात्शक्तिपर्यन्तं सर्वमेतदभीप्सितम् ।
भग्नं यैः शून्यमन्त्रेण ते स्मृताः शून्यवेदिनः ॥ २६ ॥

பாதாளத்திலிருந்து சக்திவரையாகவும் எல்லாவற்றிலும் இது விரும்பப்படுகிறது. எவர்கள் சூன்ய மந்திரத்தினால் உடைக்கின்றார் களோ அவர்கள் சூன்யத்தினை அறிந்தவர்களாக நினைவிற்கொள்ள தக்கவர்கள் ஆகிறார்கள்.

27 विषये लोलुपं चित्तं मर्कटादपि चञ्चलम् ।
सर्वशून्यपदे स्थित्वा ततो निर्वाणमेष्यति ॥ २७ ॥

விஷயங்களில் விருப்பம்கொண்ட மனமானது குரங்கு போன்று. சஞ்சலப்படுகின்றது. எல்லாவற்றையும் சூன்யம் எனும் பதத்தில் வைத்து அவ்விதமே பின்னர் நிர்வாணத்தை அடைகின்றான்.

28 सर्वतत्त्वाद्यसमम्भिन्नं देहाद्भिन्नं तथैव च ।
अहमस्माद्यसम्भिन्नं चैतन्यं सर्वतोमुखम् ॥ २८ ॥

எல்லா தத்துவத்திற்கும் தொடக்கமாகின்றதும் பிளவற்றதும் தேகத்தி லிருந்து பிளவுபட்டதும் ஆகிய "அஹமஸ்மி" நான் அதுவாக இருக்கின்றேன். எனும் பிரிவுபடாதன்மையானது எங்கும் முயற்சியையுடைய சைதன்யமாகின்றது.

29 आकाशमिव सर्वं तु सबाह्याभ्यन्तरं प्रिये ।
परानन्दमरूपं तु पश्यन्नानन्दभाग्भवेत् ॥ २९ ॥

ஆகாயத்தைப்போன்று அனைத்தும் வெளியேயும் உள்ளேயும் பிரியமானவளே! மேலான ஆனந்தத்தையும் உருவமற்ற தன்மையையும் ஆனந்த வடிவமாகவே பார்ப்பவனாகவும் பேசுபவனாகவும் ஆகிறது,

30 निरिन्धनो यथा वह्निः स्वयमेव प्रशाम्यति ।
ग्राह्याभावान्मनस्तद्वत्स्वयमेव प्रलीयते ॥ ३० ॥

நெருப்பானது விறகு இல்லாமல் தாமாகவே அமைதி கொள் கின்றது. அதைப்போன்று க்ரஹிக்கத்தக்க பாவங்களை எவன் மனதில் பெறுகின்றானோ அதேபோன்று தானாகவே லயமடைகிறான்.

31 मोहिका मूर्च्छिका माया स्वप्नश्चेति चतुर्विधः ।
सुषुप्तिर्जागृतिश्चैव सर्वमेतत्परित्यजेत् ॥ ३१ ॥

மோஹிகா, மூர்சிகா, மாயா, ஸ்வப்னம் என்று நான்கு விதமாகும். சுசுப்தி, ஜாக்ருதி என்றவாறாக இவையனைத்தையும் கைவிடவேண்டும்.

32 देहात्सूक्ष्मगतात्प्राणाच्चित्ताद्बुद्धेरहङ्कृतेः ।
सर्वस्माद्भिन्न एवाहं चिन्तयन् लभते चितम् ॥ ३२ ॥

தேகத்திலிருந்து சூக்ஷமான தன்மையூடாக பிராணன் சித்தத்திலிருந்து புத்தியும் அகத்திலுமாக எல்லாவற்றிலிருந்தும் பிரிவுபடுகின்ற நான் என்ற தன்மையை மனமானது சிந்தித்துப் பெற்றுக்கொள்ளுகின்றது.

33 सदाभिभूतये चित्तं निद्रया स्मरणादिना ।
बोधयित्वा प्रयत्नेन कुर्यात्स्वस्थं पुनः पुनः ॥ ३३ ॥

எப்பொழுதும் மனமானது இவ்வாறு இருக்கையில் நித்திரை, எண்ணம் என்பவற்றினாலும் முயற்சியினாலும் அறிந்துகொண்டு மீண்டும் மீண்டும் தனது இயல்பை செய்கிறது.

34 यदा स्थिरं भवेच्चित्तं चालयन्न कथंचन ।
न किञ्चिच्चिन्तयेत्तत्र स्थिरमेव तु कारयेत् ॥ ३४ ॥

எவ்விதம் மனதை உறுதிப்படுத்திக்கொண்டு எப்பொழுதும் சலனமடையாமல் இருக்கையில் சிறிதளவேனும் வேறொன்றை சிந்தித்திருக்கையில் அங்கு உறுதியான தன்மை செய்யப்படுகின்றது.

35 आश्रयालम्बनं चित्तं तद्वत्कुर्यान्निराश्रयम् ।
चञ्चलं निश्चलं कुर्यात्निश्चलं न तु चालयेत् ॥ ३५ ॥

மனதைப் பெற்றுக்கொண்டதில் கிரகித்துக்கொள்ள வேண்டும். செய்தலில் சுத்த தன்மையினைப் பெற்றுவிடுகிறான். மனம் சஞ்சலம் அடைவதை நிறுத்தி நிஷ்சலமான இயல்பில் இருந்து மாறாது. நிஷ்சல மாகவே அதனைச் செய்ய வேண்டும்.

36 सर्वभूतलये जाते यद्यद्व्योम सुनिर्मलम् ।
तत्तद्रूपं स्वकं ध्यायेद्व्याप्तं चैव तु निर्मलम् ॥ ३६ ॥

எல்லாப் பூதங்களிலும் லயம் ஏற்பட்டதில் எவ்விதமோ அவ்விதம் ஆகாயமானது நிர்மலமாகிறது.அவ்வவ் வடிவத்தைத் தனதாகத்யானி கையினால் அது நிர்மலமாகவும் வ்யாபித்திருப் பதாகவும் ஆகிறது.

37 तदेव जन्मसाफल्यं पाण्डित्यमिदमेव हि ।
चलद्वायुसमं चित्तं निश्चलं ध्रियते हि यत् ॥ ३७ ॥

அவ்விதமே ஜென்ம சாபல்யமானது பாண்டித்யம் என்றாகிறது. அசைகின்ற வாயுவைச் சமமாக கொண்டு மனதை அசைவின்றி எவன் செய்கின்றநானோ அவன் உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும்.

38 नैवोर्ध्वं धारयेच्चित्तं न मध्यं नाप्यधः क्वचित् ।
अन्तर्भावविनिर्मुक्तं सदा कुर्यान्निराश्रयम् ॥ ३८ ॥

மனதை மேலோ, மத்தியிலோ, கீழோ, செல்லவிடாது உள்ளே செல்லும் பாவத்தில் விடுவிக்கப்பட்டதாக எப்பொழுதும் ஆசையின்றி செய்து கொள்ள வேண்டும்.

39 निद्रायां बोधयेच्चित्तं विक्षिप्तं शमयेत्पुनः ।
पक्षद्वयपरित्यागे सम्प्राप्ते नैव चालयेत् ॥ ३९ ॥

மனதை நித்திரையிலிருந்து விழித்தெழுவது போன்றும் பின்னர் அதே நிலைக்கு இட்டுச் செல்வதாகவும் அமைதிகொள்ள வேண்டும். இருபுறமும் விடுபட்ட தன்மையில் அசைவின்மையைப் பெற்றுக் கொள்கின்றது.

40 निराश्रयं सदा चित्तं सर्वालम्बनवर्जितम् ।
मनोऽवस्थाविनिर्मुक्तं विज्ञेयं मुक्तिलक्षणम् ॥ ४० ॥

மனமானது எப்பொழுதும் ஆசையில்லாமலும் எல்லாவற்றிலும் பற்றுதலின்றியும் மனம் செல்லும் நிலையிலிருந்து விடுபட்டதாகவும் ஆகிய நிலையையே முக்திக்குரிய லக்ஷணமாக அறிந்துகொள்ள வேண்டும்.

41 सर्वालम्बनशून्यं च धारयित्वा मनो हृदि ।
यज्ज्ञानं जायते स्पष्टं तदभ्यासपरो भवेत् ॥ ४१ ॥

எல்லாவற்றையும் பெற்றுக்கொள்ளுதலில் மனதை இருதயத்தில் தடுத்துக்கொண்டு எந்த அறிவானது உறுதியாக பெற்றுக்கொள்கிறதோ அதனை அப்யாசம் செய்பவனாக இருக்க வேண்டும்.

42 ये ध्यायन्ति परं शून्यं निष्कलं निरवस्थितम् ।
ते यान्ति परमं स्थानं जन्ममृत्युविवर्जितम् ॥ ४२ ॥

எவர்கள் மேலான சூன்யத்தை த்யானிக்கின்றார்களோ அவர்கள் நிஷ்கலமாகவும் நிரவஸ்திதமாகவும் த்யானிக்கின்றார்கள். அவர்கள் மேலான ஸ்தானத்தையும் அந்த தன்மையையும் அடைகின்றார்கள்.

43 देवा देव्यस्तथा चान्ये धर्माधर्मौ च तत्फलम् ।
आश्रयाश्रयिविज्ञानं संसारस्य च बन्धनम् ॥ ४३ ॥

தேவர்கள் தேவியர் அவ்விதமே வெறும் தர்மம் அதர்மம் ஆகிய இரண்டுமே அதற்குரிய பலனாகிறது. ஆஸ்ரயம் ஆஸ்ரயி, எனும் அறிவுத் தன்மையில் சம்சாரத்தின் கட்டாக அமைகின்றது.

44 आश्रयो द्वन्द्वमित्युक्तं द्वन्द्वत्यागात्परोदयः ।
जीवन्मुक्तस्तदा योगी देहत्यागाद्विमुच्यते ॥ ४४ ॥

ஆஸ்ரயிக்கத்தக்கவன் இருமை என்னும் தன்மையில் கூறப்பட்டது. இருமையிலிருந்து விடுபடுத்தலானது மேலான உதயமாகிறது. அவ்விதமே அவன் ஜீவன் முக்தனாகவும், யோகியாகவும் உயிரை துறந்த பின்னர் விடுவிக்கப்படுகிறான்.

45 वैराग्येण वपुस्त्यागो न वै कार्यो मनीषिणा ।
आरम्भतः क्रियानाशे स्वयमेव विपत्स्यते ॥ ४५ ॥

வைராக்யத்தினால் உடலை விடுவித்தல் என்னும் அச்செயலை மனிதனால் செய்ய முடியாது. தொடக்கத்தில் செயலற்றதாகவும் தாமாகவே விடுவிக்கப்படுகிறது.

46 हृत्सरोजे हयहंरूपा या चितिर्निर्मलाचला ।
अहङ्कारपरित्यागात्सा चितिर्मोक्षदायिनी ॥ ४६ ॥

ஹ்ருதயத்தில் அஹம் என்னும் மூலமானது எந்த நிர்மலமானதும் அசைவற்றதுமாக அகங்காரத்தை விடுவதனால் அதுவே மேலான தன்மை கொடுப்பதாய் அமைகிறது

47 सर्वोपाधिविनिर्मुक्तं चिद्रूपं यन्निरन्तरम् ।
तच्छिवोऽहमिति ध्यात्वा सर्वासक्तिं विसर्जयेत् ॥ ४७ ॥

எல்லா விதமான தன்மைகளில் இருந்தும் விடுவிக்கப் பட்டதாகவும் அறிவு வடிவமாகவும் நித்யமானதாகவுமான அந்த சிவனை சிவோஹம் என்று தியானித்து எல்லா விதமான போகங்களையும் விட்டு விட வேண்டும்.

48 देशजात्यादिसम्बद्धान् वर्णाश्रमसमन्वितान् ।
भावानेतान् परित्यज्य स्वभावं भावयेद्बुधः ॥ ४८ ॥

தேசம் ஜாதி என்னும் தொடர்பினால் வர்ணம் ஆஸ்ரயம் என்பவற்றுடன் கூடியவனாக ஆகிறான்.இயல்பினால் அவற்றை அறிந்து அறிவாளியானவன் இயல்பு நிலையை பாவனை செய்தல் வேண்டும்.

49 अहमेको न मे कश्चिन्नाहमन्यस्य कस्यचित् ।
न तं पश्यामि यस्याहं तं न पश्यामि यो मम ॥ ४९ ॥

நான் ஒருவனே வேறொன்றுமில்லை; என்னைத்தவிர வேறொன் றுமில்லை நான் அதனை தவிர வேறொன்றையும் பார்க்கவில்லை; எவன் தன்னில் பார்கிறானில்லை.

50 अहमेव परं ब्रह्म जगन्नाथो महेश्वरः ।
इति स्यान्निश्चितो मुक्तो बद्धः स्यादन्यथा पुमान् ॥ ५० ॥

நானே பரப்பிரம்மம், ஜெகன்நாதன், பரமேஸ்வரன் என்று அவன் நிச்சயித்தவனாக முக்தனாக கட்டுண்டவனாக வேறுவகையில் மனித னாக விளங்குகிறான்.

51 अशरीरं यदात्मानं पश्यति ज्ञानचक्षुषा ।
तदा भवति शान्तात्मा सर्वतो विगतस्पृहः ॥ ५१ ॥

சரீரமற்றவனாக எவ்விதமோ அவ்விதம் தன்னை ஞானக் கண்களினால் பார்க்கிறான். அவ்விதமே அமைதியுடைய ஆத்மாவாக அனைத் திலும் அசைவற்றவனாக ஆகிறான்.

52 योऽसौ सर्वेषु शास्त्रेषु पठ्यते ह्यज ईश्वरः ।
अकायो निर्गुणो ह्यात्मा सोऽहमस्मि न संशयः ॥ ५२ ॥

எந்த மனிதன் அதனை எல்லா விதமான சாஸ்திரங்களிலும் அழிவற்ற ஈஸ்வரன் என்று படிப்பிக்கின்றதோ அவ்விதமே உடல் அற்றதும் நிர்குணமானதுமான ஆத்மாவானது சோஹமஸ்மி (அதுவே நானாகிறேன்) என்பதில் சந்தேகமில்லை.

53 विज्ञाप्तिमात्रो हि सदा विशुद्धः सर्वत्र यस्मात्सततं विमुक्तः ।
नादेयहेयो ह्यहमप्रतर्क्यस्तस्मात्सदा ब्रह्ममयो विशोकः ॥ ५३ ॥

அறிவித்த மாத்திரத்தில் எப்பொழுதும் மேலான தூய்மை உடையதாகவும் எல்லாவற்றிலும் எதனிலும் எப்பொழுதும் விடுவிக்கப் பட்டதும் ஆதேய மற்றும் அஹம் என்னும் தர்க்கமற்றதும் அவ்விதமே எப்பொழுதும் சோஹமற்ற பிரம்மமயம் ஆகிறது.

54 आमस्तकं पादतलावसानं सान्तर्बहिश्चर्मपटावनद्धम् ।
तत्कृत्स्नमेवामृतरूपमन्यच्चिद्रूपमात्मानमनन्यसिद्धिम् ॥ ५४ ॥

தலையிலிருந்து பாதம் வரையாகவும் உள்ளில் இருந்து வெளியில் தோலின் ரோமம் வரையாகவும் அந்த மறைந்த பொருளின் அம்ருதமான வடிவமே அது. அந்த அறிவுமயமான ஆத்மாவை இடைவிடாது சிந்திக்க வேண்டும்

55 ईशोऽहमेवास्य चराचरस्य पिता च माता च पितामहश्च ।
ध्यानं समास्थाय पदं चतुर्थं ध्यायन्ति मामेव विमुक्तिकामाः ॥ ५५

ஈசனே நான் என்று இந்த உலகில் தந்தை, தாய், பிரம்மா என்றும் த்யானத்திலிருந்து நான்காவது நிலையை விடுதலை பெற விரும்புபவன் என்னையே த்யானிக்கின்றான்.

56 ब्रह्मादिभिर्देवमनुष्यनागैर्गन्धर्वयक्षाप्सरसां गणैश्च ।
यज्ञैरनेकैरहमेव पूज्यो मामेव सर्वे प्रतिपूजयन्ति ॥ ५६ ॥

பிரம்மா முதல் தேவர், மானுடர், நாகர், கந்தர்வர், யக்ஷர், அப்சரஸ்கள் முதலான கணங்களினால் யாகங்கள் முதலான எல்லாவற்றிலும் நானே பூஜிக்கப்படுகிறேன். என்னையே அனைவரும் பூஜிக்கின்றார்கள்.

57 तपोभिरुग्रैर्विविधैश्च दानैर्मामेव सर्वे प्रतिपूजयन्ति ।
भूतानि चाहं स्थिरजङ्गमानि यावन्ति चान्यान्यहमेव तानि ॥ ५७ ॥

கடுமையான தவங்களினாலும் பல்வேறுவிதமான தானங்கள் எல்லாம் என்னையிட்டே பூஜிக்கிறார்கள். பூதங்கள் (பஞ்ச பூதங்கள்) நானே, ஜங்கமங்கள் (அசையும் பொருள்கள் அனைத்தும்) நானே. எவ்வெவையோ அவையனைத்தும் நானேயாவேன்.

58 न स्थूलसूक्ष्मो न च शून्यरूपो ज्ञानैकरूपो जगदेकबन्धुः ।
निरन्तरो निर्मल ईश्वरोऽहं स्वप्नाद्यवस्थाच्युतिनिष्प्रपञ्चः ॥ ५८ ॥

ஸ்தூலமோ, சூக்ஷ்மமோ, அல்லது சூன்யமோ அனைத்து ரூபங்களும் அவ்விதமே ஞானங்களினால் ஒரே வடிவமுடையவனாக உலகின் ஒரே உறவினன் ஆகிறேன். நிரந்தரமும், நிர்மலமும் உடைய ஈஸ்வரன் நானேயாவேன். அது ஸ்வ்பனாவஸ்தையிலோ நினைவிலோ காணும் நிஷ் பிரபஞ்ச வடிவினனும் நானேயாவேன்.

59 अनादिविज्ञानमजं पुराणं गुहाशयं निष्कलमप्रपञ्चम् ।
निरञ्जनं निष्प्रतिमं निरीशमदृश्यमग्राह्यमचिन्त्यरूपम् ॥ ५९ ॥

அநாதியாகிய அறிவும், தோற்றமற்றதும் நிஷ்களமானதும் ப்ரபஞ்சமற்றிருப்பதும் நிரஞ்சனமாக இருப்பதும் வடிவமற்று இருப்பதும் தனக்கு தலைவன் இல்லாதவனும் காண இயலாதவனும் கிரகிக்க முடியாதவனும் சிந்திக்க முடியாத வடிவம் உடையவனும் ஆக (சிவனே) விளங்குகின்றார்.

60 सनातनं ब्रह्म निरन्तरं यत्पदे पदे सोऽहमिति प्रपश्येत् ।
यो भावतस्तिष्ठति निष्प्रकम्पः स ब्रह्मभूतोऽमृततामुपैति ॥ ६० ॥

எது பிராசீனமானதும்,பிரம்மா முதலானவர்களுக்கு நிரந்தரமாக இருப்பதும் ஒவ்வோரடியிலும் ஸோஹம் என்று கூறப்படுகிறதோ எவர் இயல்பினால் நிஷ்பிரபஞ்ச வடிவமாக இருக்கின்றாரோ அவனையறிந்த அவன் பிரம்மபூதவடிவமாக அம்ருதத் தன்மையை அடைகிறான்.

61 ज्ञानमेवं वरारोहे कथितं मोक्षसिद्धये ।
आचारं कथ्यमानं तु साम्प्रतं शृणु तं मया ॥ ६१ ॥

அழகியவளே ஞானம் இவ்விதமே மோக்ஷசித்தியின் பொருட்டு கூறப்பட்டது.ஆசாரமானது என்னால் கூறப்படுகின்றதனை முழுமையாக கேட்பாயாக.

62 न स्नानं न जपः पूजा होमो नैव च साधनम् ।
अग्निकार्यादिकार्यं च नैतस्यास्ति महेश्वरि ॥ ६२ ॥

ஸ்நானம், ஜபம், பூஜை, ஹோமம், சாதனம், அக்னிகார்யம், முதலான கர்மா என்பவை ஒன்றுமே இதில் இல்லை.

63 नियमोऽपि न तस्यास्ति क्षेत्रपीठे च सेवनम् ।
नार्चनं पितृकार्यादि तीर्थयात्रा व्रतानि च ॥ ६३ ॥

ஜீவன் முக்தனாக இருப்பவனுக்கு நியமம் என்பது கிடையாது. க்ஷேத்ர பீடத்தில் சேவை செய்வது கிடையாது. பித்ரு கார்யம் கிடையாது. அர்ச்சனம் கிடையாது, அவ்விதமே தீர்த்த யாத்திரை கிடையாது. விரதங்கள் என்பனவும் கிடையாது.

64 धर्माधर्मफलं नास्ति न तिथिर्लौकिकक्रिया ।
सन्त्यजेत्सर्वकर्माणि लोकाचारं च सर्वशः ॥ ६४ ॥

தர்மம், அதர்மம் எனும் பலன் கிடையாது.திதி கிடையாது. லௌகீகம் கிடையாது. எல்லா கர்மங்களையும் லோக ஆசாரங்கள் அனைத்தையும் கைவிட வேண்டும்.

65 समयाचारनिःशेषान् कृत्यजातं तु बन्धनम् ।
संकल्पं च विकल्पं च ये चान्ये कुलधर्मिकाः ॥ ६५ ॥

சமயாசாரப்படியாக எஞ்சியவைகளை பஞ்சக்ருத்ய வடிவமுடையதாக கட்டுண்ட தன்மையால் சங்கல்பத்தையும் விகல்பத்தையும் குல தர்மத்தை பின்பற்றுபவர்கள் எவர்களோ அவர்களும் ஏனையவர்களும் பின்பற்ற வேண்டும்.

66 सिद्धीश्च विविधाकाराः पातालादि रसायनम् ।
प्रत्यक्षेणापि लभ्येरन्नैव गृह्णीत साधकः ॥ ६६ ॥

சித்தர்கள் பல்வேறு வடிவமுடையவர்கள் யாவும் அவை பாதாளம் முதல் ரசாயனம் வரையாக அனைத்தையும் ப்ரத்யக்ஷமாகவே கடந்தவராக விளங்கும் அதேவேளை சாதகர்களால் கிரகிக்க முடியாதவராகிறார்.

67 सर्वे ते पशुबन्धाः स्युरधोमार्गप्रदायकाः ।
एतैर्नास्ति परा मुक्तिश्चिद्रूपं व्यापकं विना ॥ ६७ ॥

அவர்கள் அனைவரும் உயிரால் கட்டுண்டவர்கள் ஆகின்றார். இவர்கள் விருப்பமற்றவர்களாக வழிப்படுத்தபட்டவர்கள் ஆகிறார்கள். இவ்வாறானவர்களுக்கு இவர்களுக்கு அறிவின் வடிவத்தையோ பரந்த தன்மையையோ அறியாமல் பராமுக்தி எனும் மேலான நிலை இல்லை.

68 येन केन विशेषेण सर्वावस्थोऽपि योगधृक् ।
क्षेत्रपीठे च सन्देहाद्वर्जयेद्यदि कौतुकम् ॥ ६८ ॥

இத்தகைய சிறப்புகளினால் எல்லா நிலைகளிலும் யோக்கியதை தாங்கியவர்களாக க்ஷேத்ர பீடத்தில் இருப்பவர்களாக மகிழ்வுடன் உடலை கைவிட வேண்டும்.

69 कृमिकीटपतङ्गाश्च तथा देवि वनस्पतीन् ।
न नाशयेद्बुधो जीवान् परमार्थमतिर्यतः ॥ ६९ ॥

கிருமி, புழு, பூச்சி என்றவாறே தேவியே! மூலிகைகள்கூட அறிவாளியானவன் பரமார்த்த கதியை அடைகிறது என்பதனை நாசமடையச் செய்யவில்லை.

70 न मूलोत्पाटनं कुर्यात्पत्त्रच्छेदं विवर्जयेत् ।
भूतपीडां न कुर्वीत पुष्पाणां च निकृन्तनम् ॥ ७० ॥

மூலத்தினை (கிழங்கினை) சேதப்படுத்துதலை செய்யக் கூடாது. இலைகளை சேதப்படுத்துதலையும் நீக்க வேண்டும். பூதங்களை (பஞ்ச பூதங்களால்) படிக்கப்படத்தைக்கூட செய்யக் கூடாது. பூக்களைக்கூட துண்டிக்கக்கூடாது.

71 स्वयंपतितपुष्पैस्तु कर्तव्यं शिवपूजनम् ।
मारणोच्चाटनादीनि विद्वेषस्तम्भने तथा ॥ ७१ ॥

தாமாகவே விழுந்த பூக்களிலேயே சிவ பூஜை செய்ய வேண்டும். மாரணம் சொல்லப்படுகின்ற பொழுதிலும் வித்வேசம் ஸ்தம்பனம் செய்யப்படும் வேளையிலும் அவ்விதமேயாம்.

72 ज्वरभूतग्रहावेश- वश्याकर्षणमोहनम् ।
न कुर्यात्क्षुद्रकर्माणि काष्ठपाषाणपूजनम् ॥ ७२ ॥

ஜ்வரம், பூதக்ரஹம், தேசத்தின் வசியம் ஆகர்ஷணம், மோஹனம், காஷ்ட பூஜனம், பாஷாண பூஜனம் முதலான சிறு தெய்வங்களுக்கான செயல்களை செய்யக்கூடாது.

73 समोऽमित्रे च मित्रे च समो लोष्टे च काञ्चने ।
अभिलाषो न कर्तव्य इन्द्रियार्थे कदाचन ॥ ७३ ॥

நண்பனோ, நண்பன் இல்லையோ, கபாலம் ஏந்தியவனோ அவ்வித மில்லையோ இந்த்ரியத்தின் பொருட்டோ விருப்பத்தின் பொருட்டோ ஒருபோதும் செய்யத்தக்கதல்ல.

74 आत्मारामो भवेद्योगी निर्भयो विगतस्पृहः ।
समनिन्दाप्रशंसश्च सर्वभूतसमस्तथा ॥ ७४ ॥

தனது மகிழ்வின் பொருட்டு யோகியானவன் பயமின்றி பற்றின் றியவனாக இருப்பானாகில் இகழ்வின்றி சமமானவனாகவும் புகழ்ச்சி இல்லாமலும் உயிர்களிடத்திலும் சமமாக இருப்பவனாக இருத்தல் வேண்டும்.

75 समदृष्टिस्तु कर्तव्या यथात्मनि तथा परे ।
विवादं लोकगोष्ठीं च कलहाश्च विवर्जयेत् ॥ ७५ ॥

சமமான பார்வை உடையவனையே செய்யத்தக்கது. எவ்விதம் மனத்திலோ அவ்விதமே வெளியிலும் கொள்ளுதல் வேண்டும். அதே வேளை விவாதம், உலக விகாரம் பேசுதல், கலஹம் என்பவைகளை விலக்க வேண்டும்.

76 शास्त्रगोष्ठीं न कुर्वीत कुभाषितसुभाषितान् ।
ईर्ष्यां पैशुन्यदम्भे च रागं मात्सर्यमेव च ॥ ७६ ॥

சாஸ்திரங்களின் விரோதங்களை பேசுதலையும் நல்ல உப தேசங்களைக் கூடாத வகையில் பேசவும் கூடாது. பொறாமையி னால் செய்வாராகில் அச்செயல் வெறுமையாகும். புகழுக்காகச் செய்வாராகில் ஆசையும் பொறாமையையும் உடையதாக அமையும்.

77 कामक्रोधौ भयं शोकं त्यजेत्सर्वं शनैः शनैः ।
सर्वद्वन्द्वविनिर्मुक्तः सन्ततं जनवर्जितः ॥ ७७ ॥

எல்லாவற்றிலும் மெதுமெதுவாக காமம் க்ரோதம் பயம்,சோகம் என்பவற்றை விலகிக்கொள்ளுதல் வேண்டும்.எல்லா விதமான இருமை தன்மையிலிருந்து விடுபட்டவராக எப்பொழுதும் மக்கள் இல்லாத தன்மை உடையவர் ஆகிறார்.

78 अनेनैव शरीरेण सर्वज्ञः सन् प्रकाशते ।
ज्ञानेनैव यथा मोक्षस्तथा सिद्धिर्निरर्थिका ॥ ७८ ॥

இத்தகைய உடலினால் எல்லா வற்றையும் அறிந்திருந்த வனாக அறியப்படுகிறார்ன். அவ்விதமே ஞானத்தினாலேயே மோக்ஷத்தையும் அவ்விதமே சித்திகளையும் தடையற்றவனாக பெற்றுக் கொள்கின்றான்.

79 तथापि भोगमिच्छन्तः सिद्धिमिच्छन्ति साधकाः ।
अणिमादिगुणावाप्तिर्जायतां वा न जायताम् ॥ ७९ ॥

அவ்விதமே போகத்தில் விருப்பம் கொள்வானாகில் சாதகர்கள் சித்தியை விரும்புகின்றனர். அணிமாதி குணங்களை வெற்றி கொள் ளுகின்றானோ வெற்றி கொள்ளவில்லையோ அவ்விதமே உடலை விடுத்து நிர்மலமாகிய பதியை அறிந்துகொள்பவன் ஆகிறான் .

80 तथापि मुच्यते देही पतिं विज्ञाय निर्मलम् ।
पञ्चभूतात्मको देहः शिवस्तत्रैव तिष्ठति ॥ ८० ॥

அவ்விதமே நிர்மலமான பதியை அறிந்து தேகத்தை உடையவன் அவ்விதமே விடுவிக்கப்படுகின்றான். தேகமானது பஞ்சபூத தன்மை யானது. அதில் சிவனே இருக்கிறார்.

81 शिवाद्यवनिपर्यन्तो लोकोऽयं शङ्करात्मकः।
ईदृशं ज्ञानिनं दृष्ट्वा पूजयन्ति च ये नराः ॥ ८१ ॥

சிவனிலிருந்து ஆகாயம் வரையாக உலகில் நன்மை செய்யக் கூடிய சங்கரன் உள்ளுறைகின்றான். இவ்வாறாக ஞானிகளைக் கண்டு அந்த மனிதர்கள் பூஜிக்கிறார்கள்.

82 गन्धं पुष्पं फलं धूपं स्नानं वस्त्रं च भोजनम् ।
निवेदयन्ति ये केचिद्वाङ्मनःकायकर्मभिः ॥ ८२ ॥

சந்தனம், பூ, பழம், தூபம், ஸ்நானம், வஸ்த்ரம், போஜனம் என கார்யம், கர்மம், என்பவைகளை எந்த எவர்கள் வாக்கு, மனம், காயம், கர்மம் என்பவைகளால் நிவேதனம் செய்கின்றனர்.

83 तथैव ते विमुच्यन्ते मुक्तिमार्गाभिकाङ्क्षिणः ।
स्तुतिनिन्दाकरास्तस्य पुण्यपापे समाप्नुयुः ॥ ८३ ॥

அவ்விதமே அவர்கள் விடுவிக்கப்படுகின்றனர். எவ்வாறெனில் முக்தி மார்க்கங்களில் விருப்பம் உடையவர்கள் ஆகின்றனர். ஸ்துதி கூட நிந்திக்கத்தக்கதாக அமைய புண்ணியம் பாபம் இரண்டிற்கும் சமமான தன்மை பெறுகின்றனர்.

84 यज्ज्ञानाचरणं पृष्टं तत्सर्वं कथितं मया ।
कालज्ञानं वरारोहे किमन्यत्परिपृच्छसि ॥ ८४

எது ஞானாசாரமோ அது என்னிடம் கேட்கப்பட்டது. அவை யனைத்தும் என்னால் கூறப்பட்டது. அழகியவளே கால ஞானத்தை வேறோரிடத்தில் நன்கு கேட்பவளாக இருக்கின்றாய்

தேவீகாலோத்தராகமம்
தமிழ் மொழிபெயர்ப்பு முற்றுப் பெற்றது.

காலோத்தரம் எனும் பெயருடைய தேவீ காலோத்தர ஆகமம், சிவாகம மரபில் மூலாக மங்கள் இருபத்தெட்டுள் ஒன்றாகவோ உபாக மங்கள் இருநூற்றேழினுள் ஒன்றாகவோ இடம் பெறாத ஆகமம் ஆகும். இங்கு ஆகமம் என்பது தேவீபார்வதிக்கும் ஈஸ்வரன் சிவனுக்கும் இடையே யான உரையாடலாக அமைவதால் அது தேவீ எனும் பெயரை மாத்திரம் தாங்கியதாக உள்ளது. காலோத்தரம் என்பதில் காலம் என்பதில் காலம் கடந்த உயர்வும் சிறப்பும் மேன்மையும் உடைய உயர்ந்த இறை தத்துவம் என்றும், உத்தரம் என்பது மேன்மை, சித்தாந்தம் என்றும் பொருள் தருகிறது. இதனூடாக தேவீ காலோத்தர ஆகமம் என்பது தேவீ பார்வதிக்கு சிவன் கூறிய முக்திக்கு வழி வகுக்கத்தக்க உயர்ந்த சித்தாந்த பிரமாணம் என்று பொருளுடையதாகின்றது.

இவ்வாகமம் ஞானபாதம் மாத்திரதே உள்ளடங்கலாக அமைகின்றது. எண்பத்து நான்கு சுலோகங்களை மாத்திரம் உள்ளடங்கலாகக் கொண்ட இந்நூல் தமிழ்மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்படுகின்றது.



Guru Printers, Thirunelvely.


ISBN 978-955-0877-57-7